# ப்ராதஸ் - ஸ்மரண ஸ்தோத்திரம்

(விடியற்காலையில் தியானித்துச் சொல்லும் துதி.)

**ப்ராதஸ் - ஸ்மராமி ஹ்ருதி3 ஸம்ஸ்பு2ரதாத்மதத்வம்**
**ஸச்சித்ஸுக2ம் பரமஹம்ஸக3திம் துரீயம் ।**
**யத் - ஸ்வப்ந - ஜாக3ர - ஸுஷுப்தமவைதி நித்யம்**
**தத் - ப்3ரஹ்ம - நிஷ்களமஹம் ந ச பூ4தஸங்க4: ॥** 1

பரமஹம்ஸர்களால் அடையக்கூடியதும், விழிப்புக்கான வைச்வானரன், கனவுக்கான ஹிரண்யகர்பன், உறக்கத்திற்கான ஈச்வரன், இம்மூவர்களைக் காட்டிலும் மோன நான்காவதும், ஸத்தாகவும், சித்தாகவும், ஆனந்தமாகவும் ப்ரகாசிப்பதுமான ஆத்மதத்துவத்தை விடியற்காலையில் ஹ்ருதயத்தில் ஸ்மரிக் கிறேன். ஜாகரம், ஸ்வப்னம், ஸுஷுப்தி (விழிப்பு, கனவு, உறக்கம்) இம்மூன்று அவஸ்தைகளுக்கும் சாக்ஷியானதும், அழிவில்லாததுமான நிஷ்கள (பகுபடாத பூர்ணமான) ப்ரஹ்மம் எதுவோ அது தான் நான். (பஞ்ச) பூதக் கூட்ட மல்லேன்.

**ப்ராதர் - ப4ஜாமி ச மனோவசஸா - மக3ம்யம்**
**வாசோ விபா4ந்தி நிகி2லா: யத3னுக்3ரஹேண ।**
**யம் நேதி நேதி வசனைர் - நிக3மா அவோசன்**
**தம் தே3வதே3வ - மஜ - மச்யுத - மாஹுரக்3ர்யம் ॥** 2

மனதிற்கும் வாக்கிற்கும் எட்டாதவரை காலையில் பஜிக்கிறேன். எவர் அனுக்ரஹத்தால் எல்லா வாக்குகளும் ப்ரகாசிக்கின்றனவோ, வேதங்கள் (நேராகக் குறிக்க முடியாமல் மற்றவைகளை) இதல்ல, இதல்ல என்று (தள்ளி சேஷ மாக எவரைச்) சொல்லுகின்றன வோ, அவரையேதான் தேவர்களுக்கெல்லாம் தேவராகவும், பிறப்பு இல்லாதவராகவும், நழுவலில்லாதவராகவும், (தன் நிலையில் நிலைத்தவராகவும், காரண ரூபியான முதல்வராகவும் (வேதங்கள்) கூறுகின்றன.

**ப்ராதர் - நமாமி தமஸ: பரமர்கவர்ணம்**
**பூர்ணம் ஸநாதனபத3ம் புருஷோத்தமாக்3யம் ।**
**யஸ்மின்னித3ம் ஜக3த்3 சேஷமசேஷபூ4தௌ**
**ரஜ்ஜ்வாம் பு4ஜங்கம இவ ப்ரதிபா4ஸிதம் வை ॥** 3

எல்லாவற்றிற்கும் பிறப்பிடமாயுள்ள எதனிடத்தில் இவ்வுலகம் முழுவதும் பழுதையில் பாம்பு போல் (அறிவின் தவறான பிரதிபலிப்பு ஒளியினால்) காணப் படுகிறதோ, எது (அவித்யை) இருளுக்கு அப்பாற்பட்டதான சிறந்த தேஜோ

ரூபமானதோ, எது எங்கும் நிறைந்ததோ, எது சாச்வதமான நிலையோ, எது புருஷோத்தமன் என்னும் பெயர் பெற்றதோ அதை காலையில் நமஸ்கரிக்கிறேன்.

**ச்லோக - த்ரய - மித³ம் புண்யம் லோக - த்ரய - விபூ⁴ஷணம் |**
**ப்ராத: காலே படே²த் யஸ்து ஸ க³ச்சேத் பரமம் பத³ம் || 4**

மூன்று உலகங்களுக்கும் ஆபரணம் போன்றதும், புண்ணியமளிப்பதுமான இம்மூன்று சுலோகங்களையும் காலையில் எவனொருவன் படிக்கிறானோ அவன் பாமபதம் (ப்ரம்ம ஞானம்) அடைகிறான்.